## CYCLONE DAMAGES.
## சுழல்காற்றினல் நேர்ந்தசேதங்கள்.

இந்த நவம்பர்மீ 22, 23உ களில் சென்னை, செங்கற்பட்டு, தென்னூற்காடு ஜில்லாக்களின் கடற்கரையோரமான புறங்களில் அதிக பலமான சுழல்காற்றடித்தது அதனல் உண்டான சேதங்கள் மிகுதி. காற்று என்பது வாயுவின் இயக்கம். இது உண்டாகும் விதத்தை கடற்காற்று, தரைக்காற்று என்னும் தலைப்பின் கீழ் முன்னமே விரித்துக் கூறியிருக்கிறோம். சீதோஷ்ண பேதத்தினல் சமுத்திரத்திலிருந்து நிலத்துக்கும், நிலத்திலிருந்து சமுத்திரத்துக்குமாக வாயுவினியக்கம் தோன்றுவதுண்டு என்று சொல்லி நிரூபித்தோம்.

இப்பொழுது இந்தக்காற்று, பெருங்காற்று, புயற்காற்று, சுழல்காற்று எனவுள்ள விவரத்தைச் சிறிது எடுத்துச் சொல்லுவோம். "தென்றல் முற்றிப் "பெருங்காற்ற" யிற்று" என்பது பழமொழி. தென்றல் என்பது இளங்காற்று. வாயுவின் இயக்கம் மெதுவாயின்றி மிக்க விரைவாகவும் பெருந்திறையாகவுமிருந்தால் அதற்குப் பெருங்காற்று என்று சொல்கிறது. இந்தக்காற்று அடித்தால் மேகங்கள் சிதறிப்போகும். ஏனெனில் இதன் இயக்கம் பூமியிலிருந்து மேகமண்டலம்மட்டும் பரவிப் பெருமிதமாய்க் கூடியிருப்பதாலும் இதில் குளிர்ச்சியென்பதில்லை யாதலாலும் இக்காற்று மேகங்களின் மேல்பட அவை ஒதுக்கப்பட்டுச்சிதறுண்டுபோகின்றன. மேகம் என்பது நீராவிப்படலமன்றி வேறல்ல. இது ஆவியாகச் சமந்துள்ளநீரை மழையாகப் பொழிவதற்குக் குளிர்ச்சிவேண்டும். உலையில் மூடின பாத்திரத்தின்மேல் ஒட்டிய ஆவி, குளிர்காற்றுப் பட்டவுடனே நீர்த்திவலைகளாக மாறுவதைப் பரீக்ஷித்துப்பாருங்கள். புயல் காற்று என்பது மழையோடு கலந்து அடிப்பது. இது மேகங்கள் கூடிக்குமுரிக்கொண்டு இடம்விட்டு இடம்பாய சீதோஷ்ணநிலை பேதத்தால் உண்டாகும் காற்றுக்குப்பேர். காற்றுக்குள்ள இயக்கத்தின் வலியெல்லாம் பூமியின் ஆகர்ஷண சக்தியினலும் காற்றின் லேசுத் தன்மையாலுமே யுண்டாகிறது. மேகங்கள் சீதோஷ்ண பேதத்தால் அதிக வேகமாகவும் திடீரென்றும் இடம்விட்டு இடம் மாறிபோடுவதால் புயல்காற்று உண்டாகிறது. இந்தக் காற்றினுடைய வேகம் கப்பல்களையெல்லாம் மோதியுடைத்து விடும்படியான அவ்வளவு பலமுள்ளதாயிருக்கும். மழைபெய்து பூமி இளகியிருக்கும்பொழுது பலமான காற்று அடித்தால் மரங்கள் வேரற்று விழுந்துபோம். கடலில் அலைகள் வெகு கொந்தளிப்பாயிருக்கும், பார்க்கப் பயங்கரமான இக்காட்சியைக் கண்டுணர்ந்தால் தான் அதன் கொடுமையும் மஹிமையும் விளக்கும். கொடுமையென்று சொன்னது அதன் அழிக்கும் சக்தியை ஒட்டியும், மஹிமையென்று சொன்னது அதன் வல்லமையின் சிறப்பையொட்டியும் கூறியதாக உணர்க.

சுழல்காற்று என்பது நீர்ச்சுழி சுற்றிக்கொண்டு கீழே யிறங்குவதுபோல் காற்றுச் சுழன்றுகொண்டு மேலேறிப் போவதனல் உண்டாகிறது. காற்று ஒரு திசையிலிருந்து மறு திசைக்கு அடிக்கும்பொழுது அது நேரோட்டமாக ஓடுகிறது. காற்று கீழேயிருந்து நேர் மேலே அதிவேகமாக ஓடும்பொழுது அது சுழன்றுதான் மேலெழல்வேண்டும். பீரங்கி வாயில் குண்டுவைத்துச் சுடுகிறார்களே அதுவும், அதிவேகமாய் எறியப்பட்ட அம்பும் குறிதப்பாது பாய்ந்து தாக்கவேண்டுமானல் சுழன்றுகொண்டேதான் போகும். அப்போதுதான் அதற்கு விசையும் ஒழுங்கும் ஒத்துவரும். சுடப்பட்டகுண்டு அல்லது எய்யப்பட்ட அம்பு காற்றைக் கிழித்துக்கொண்டு நேர்முகமாகப் போகவேண்டுமானல் தமர் கடைவதுபோல் சுழன்றுகொண்டுதான் போகவேண்டும். இருசக்திகள் ஒன்றையொன்று எதிர்த்துத் தாக்கிக்கொண்டு நிற்கப் புக்கிடம்

சிறிது நேரங்கால் அது சுழன்றுகொண்டே அதுவழியாகச்செல்லும்: வேகத்தின் அதிகரிப்புக்கும் அதன் எதிர் மறுப்புச் சக்தியின் பலத்துக்கும் தக்கபடியிருக்கும் சுழற்சியின் வேகம். உதாரணமாகக் காற்றாடியந்திரத்தைப் பாருங்கள். காற்றாடியைக் கையில் பிடித்துக்கொண்டு ஓட ஓட அது அதிகமாகச் சுழல்கிறது. எதிர்வேகம் குறையக் குறைய சுழற்சியின் வேகமும் குறைகிறது. சென்றமீ நேர்ந்த சுழல்காற்றினால் தென்னாற்காடு ஜில்லாவிலும் புதுச்சேரியிலும் சேதம் அதிகம். ஜனங்களில் இறந்தவர்கள்மட்டும் 1000-த்துக்கு மேலிருக்கும். கூரை குச்சுகளெல்லாம் காற்றில் தூக்கிக்கொண்டு போகப்பட்டன. மண்வீடுகளும், செங்கல்வீடுகளில் மண்ணால் கட்டிய வீடுகளும் அதிகமாகச்சேதமாய்விட்டன. கிராமாந்திரங்களில் 100, 200 வீடுகளிருந்தால் அவற்றில் 50, 60 தான் தங்கின. மற்றவை சேதமாய்விட்டன. தென்னைமரங்கள் லக்ஷக்கணக்காய் விழுந்து அழிந்துவிட்டன. தென்னிந்தியா ரயில்வேயில் மரங்கள் விழுந்தும் தந்திஸ்தம்பங்கள் பறித்துக்கொண்டு போகப்பட்டும், ரயில்பாதைகள் வெள்ளத்தில் உடைத்துக்கொண்டும் இப்படியாக மிகச் சேதங்கள் நேர்ந்துவிட்டன. சில நாட்களுக்கு போக்குவரத்து சரியாக நடக்காமல் நின்று பிறகு பாதையை ஒக்கப்பண்ணி ரயில் விட்டுவருகிறார்கள். ஆயிரக்கணக்கான ஜனங்கள் வேலையற்று உண்ணச்சோறும் தங்க நிழலுமின்றித் தவிக்கிறார்கள். தனவந்தர்கள் இவர்களை ஆதரித்து வந்தாலும் அது போதாமலிருக்கிறது. சர்க்கார் ரெவினியூபோர்டு மெம்பர் ஒருவரை யனுப்பி விசாரிக்கச் சொன்னார்கள். அவரும் மேலே சொன்ன விவரங்களை உறுதிப்படுத்தி ரிபோர்ட்டு அனுப்பியிருக்கிறார். வீடுகள்கட்ட காட்டிலிருந்து மரங்கள் வெட்டிக்கொண்டுபோக சகாயம் செய்துவருகிறார்கள். சாலையில் விழுந்துபோன மரங்களையும் ஏலத்தில் விற்று வருகிறார்கள். இந்தச் சுழல்காற்றுக்கு மையம் புதுச்சேரியண்டையாகையால் அங்கே சேதம் அதிகம். ரயில்வண்டித் தொடர்கள் இப்படியும் அப்படியுமாகப் பக்கம் மாற்றி விழுந்து போயிருந்தன. இதிலிருந்து சுழல்காற்றின் சுற்றுமார்க்கம் இப்படியென்று நன்றாகத் தெரியலாயிற்று. வாயு பலத்துக்கு அதிஷ்டான தேவதை. ஆகையால் அது அதன் பலத்தைக் காட்டியது ஏழை ஜனங்களுக்குத் துன்பமாய் முடிபினும் இது எல்லாரும் அருமையாய் உணர்ந்தறியவேண்டிய பிரகிருதி வித்யாபாடங்களில் ஒன்றாம்.

நம்முன்னோர்களான பெரியோர் இதை வெகு அழகாக சாமான்ய ஜனங்களுக்கும் விளங்கும்படி ஐதிகமாக (புராணக் கதையாக)ப் போதித்திருக்கிறார்கள். பஞ்ச பூதங்களின் சூக்ஷ்மாம்சங்களையும் பஞ்சலிங்கங்களாக ஒவ்வொன்றையும் அதற்குரிய ஸ்தலமொன்றில் நிர்ணயித்து அதற்கு கோயில் புராணமும் ஸ்தலபுராணமும் கற்பித்து எழுதியிருக்கிறார்கள். இந்த உலகமே கற்பனையினாலுண்டானது. சிருஷ்டிக்கு ஜீவேசுவரபேதமில்லை. சமஷ்டி வியஷ்டி ஏற்பட்டதே பாவனையினால். சமஷ்டிஜீவனை ஈசுவரனென்றும், வியஷ்டிஜீவனை மனிதன் என்றும் சொல்லுகிறோம். சங்கற்பமின்றிச் செயலில்லை. ஈசுவர சங்கற்பங்கள் பிரகிருதி தர்மங்களாக விளங்குகின்றன. ஜீவசங்கற்பங்கள் குணவிசேஷங்களாக விளங்குகின்றன. பிரகிருதி தர்மங்களுக்கும் குணவிசேஷங்களுக்கும் எவ்வளவுக்கெவ்வளவு பொருத்த மிருக்கின்றனவோ அவ்வளவுக்கவ்வளவு மனிதனுடைய மனோசக்தியும் ஈசுவரனுடையமாயாசக்தியும் நேரொத்துநின்று விளங்கும். பிரகிருதி தர்மங்கள் பொய்ப்பதில்லை. அப்படியே ஒருவனுடைய மனோ தர்மமும் வாய்மைபற்றி சத்தியம்பிறழாது நின்றால் அவன் பிரகிருதியாத்மகனாகிறான். அதாவது பிரகிருதியோடொன்றுபட்டு விளங்குகிறான். ஒன்றுபட்ட விடத்தில் எல்லா மர்மங்களும் வெளியாகும், அப்படியென்றால்

வெளிப்படையாகும்—அதாவது அதன் உண்மையை மறைத்துக்கொண்டிருக்கிற திரை (Veil of Nature) விழுந்துபோம். திரை விழுந்துபோனாலும் விஷயவாசனையின் விசேஷத்தால் மனம் பஹிர்முகப்பட்டு விஷயங்களைப் பற்றி நிற்கும். பற்றி நின்றாலும் அந்தர்முகப்பட்டு உண்மைத் தரிசனம் செய்யும் சக்தியும் வாய்ந்ததாயிருப்பதால் உண்மையை உள்ளபடி ஆய்ந்துணர்ந்து அப்பியசிப்பதினாலே வாசனாக்ஷயமுண்டாகி மனம் நிர்விஷயப்பட்டு நிற்கும். இதுவே உண்மையானதியானம். "தியானம் நிர் விஷயம் மன:" என்று சுருதியும் முறையிடுகிறது. மனம் நிர்விஷயப்பட்டு நின்றால் தேஹமே தேவாலயமாகிறதென்று சொல்லப்பட்டிருக்கிறது; ("தேஹோ தேவாலய ப்ரோக்த:" என்பது சுருதிவசனம்.) அந்த தேஹத்திலுள்ள ஜீவன் கேவல சிவனாகவும் ஆகிறது. அறியாமையை (பிரகிருதி தர்மங்களை அறியாது மயங்குகிற மயக்கத்தை) விட்டு புத்தி நிர்மலப்பட்டவிடத்து விஷயப்பற்றையறுத்துச் சிந்தித்தால் சிந்தனைகழன்ற சிந்தையில் (நான் சிந்திக்கிறேன். என்கிற அஹம்பாவமழிந்த சிந்தையில்) அறிவின் மஹிமை விளங்குகிறது. 'தீர்க்க தரிசனம்' என்று சொல்லும் முழுக்கண்பார்வைபெற இந்த வழியொன்றே தவிர வேறில்லை. அதற்கு மனத்தெளிவு ஒன்றே சாதகம். இந்தச் சாதகம்பெற சாதனங்கள் (வழிவகைகள்) எத்தனையோ உண்டு. அவைகளை மனோபக்குவமறிந்து கையாளவேண்டும்.

மனிதன் பிரகிருதியின் மஹிமைகளையுணர நித்தியப்படி சமபவங்களே போதுமானாலும் அவன் இருட்டில் கிடந்து உழன்றுவரும் விசேஷத்தால் ஆந்தைபோல் பகல்குருடாய் விடுகிறான். அதாவது, பிரத்தியக்ஷமான பொருளைப்பார்க்கப் பார்வையற்றவனாகிறான். இப்பொழுது நேர்ந்த சுழல்காற்றைப்போன்ற சம்பவங்கள் பிரகிருதியின் மஹத்துவத்தை விளக்கச் சாதனமாயிருக்கின்றன. ஏழைகளை வதைத்துச்சேர்த்த பணச்செருக்கால் மமதைகொண்டு மதிமயங்கிக் கிடக்கும் மூடாத்மாவுக்கு இதைப்போன்ற அபூர்வ சம்பவங்கள் அவன் மதிமயக்கத்தை நீக்குவதற்கான காரணங்களாயிருக்கின்றன. மணல் வீடு கட்டி விளையாடும் சிறு குழந்தைகளைப்போல் மனிதன் திடபாவமின்றி சங்கல்பசித்தி யின்னதென்றுணரமாட்டாமல் உழல்கிறான். அப்படியுழல்பவனை சுழல்காற்று வந்து காலோடு பறித்துத் தூக்கி ஒரு சுற்றுச்சுற்றித் துரும்புபோல் பறக்க வெறிந்தால் அவன் மமதையடங்கி சிந்தாக் கிராந்தனாகிறான். சிந்தையில் விழுந்துழன்றாலும் சிந்தனை சிந்தனைதானே. உழல் சிந்தைக்கும் சுழல்காற்றுக்கும் ஒற்றுமையுண்டு. சுழல்காற்று மனிதனைச் சிதற அடிப்பதுபோல உழல் சிந்தனை மனதைச் சிதற அடிக்கும். மனம்† சிதறிப்போகாது சிதறினல் அது மூடத்தை உதறிபெறிந்து விழித்துக்கொள்ளும். இப்படி மூடத்தை உதறிபெறிந்து விழிப்புக்கொள்ளும் மனமே தரிசன சக்தியைப் (Powers of observation) பெற்றுய்யும். மனம் உய்தலாவது மூடத்தில் ஆழ்ந்து அறிவிழந்துபோகாமல், மூடத்தைவிட்டு அறிவுமயமாகி அறிவானுக்கும் அறிபொருளுக்கும் இசைந்ததோர் ஞானசாதனமாதல்.

"அறிவானும் அறிபொருளும்" ஒன்றுபட்டால், அதுவே அறிவுமயமாகும். இதை அனுபவித்துணரவேண்டுமே யன்றி எழுத்தால் வார்த்தையால் சொல்லிக்காட்டமுடியாது.

---

† அதாவது 'உருக்கிவார்த்தஸ்படிகம்போல் அதன் அழுக்காறழியச் சிதைந்து பின் ஸ்படிகரூபமாக நிர்மலஸ்வபாவம்பற்றி ஒன்றுசேர்தல்.'

## THE BOYHOOD OF GREAT MEN OF THE WEST.—I. HORATIO NELSON.

*(The Hero of Trafalgar 21st October, 1805.)*

## மேற்றிசை மேதையோர் பாலிய சரிதை.

### 1. ஹோரேஷ்யோ நேல்சன்.

(*Concluded.*)

(கார்த்திகைமீ ஸஞ்சிகையின் 254-பக்கத்தொடர்ச்சி)

ஐபீரியா (Spain) நாட்டுக்கும் ஆங்கில நாட்டுக்கும் 'பாக்லண்ட்' (Falkland) தீவுகளைப்பற்றிய விவாதம் முடிவுபெறவே அதினிமித்தமனுப்பப்பட்ட 'இரேஜினபிள்' கப்பலில் அமரப்பெற்ற போர்வீரர் பரிசுபெற்றுப் பிரிந்துபோயினர்.

ஆலசியமற்ற நெல்சன் வேலையில்லாமல் வீண்காலம்போக்க மனமின்றி தன் மாமனுடன் சமானனாகவிருந்து வேலைபார்த்து வந்த "ஜான் இராத்போன்" (John Rathbone) என்பவர் ஒரு வாணிபமரக்கல அதிபனாய் மேற்கு இந்திய தீவுகளுக்கு (West Indies) புறப்படுகிற செய்தியறிந்து அவனோடு தானும் கூடச் சென்றான். ஏதோ காரணத்தாற் கப்பற்றொழிலில் வெறுப்புற்ற இராத்போன் இளைஞன் நெல்சனும் இக்களங்க குணத்தையே கைக்கொள்ளும் வண்ணம் கழறினார். இவரிடமிருந்து மாலுமி சாஸ்திரத்தில் தேர்ச்சி பெற்றோனாயினும் மன்னர் மரக்கலப்படையிற் பணிவிடைசெய்ய மனவெறுப்பெய்தினன். 'சக்லிங்' என்பவர் "ஜயக்கலம்" (Triumph) என்ற தமது கப்பலில் தன் மருகன் நெல்சனை அமர்த்திக்கொண்டு அவன் கொண்ட களங்க குணத்தையும் களைந்தார். இக்கப்பல் காப்புக் கப்பலாக தெளிந்த புனலும், தடங்கரையும் பெற்றொளிரும் தெம்ஸாற்றின்மீது தங்கி இருந்தது. இங்ஙனமிருந்து மாலுமிவேலையை நெல்சன் தன்னாலியலுமளவு பயில முயலுவானாயின் 'சத்தாம்' பட்டணத்துப் படக்கலமொன்றில் படைவீரனுக் கருகாமையிலுள்ள படகுக்கதிபனாக அமர்த்துவதாக அவன் மாமன் அறைந்தான். இதைக்கேட்டு அளவற்ற ஆனந்தங்கொண்டு நெல்சன் அவ்வாழியைச் சுற்றுப்பிரயாணஞ்செய்து ஆங்காங்கு கண்ணுக்குத் தென்படும் மணல்வெளிகளையும், பாறைகளையும் கவனமாய் மனதில் பதித்துக்கொண்டு பயமின்றி கப்பலைச் செலுத்தத் துணிவுபெற்றான். மேன்மேலும் விருத்தியடைந்து மாலுமி சாஸ்திரத்தில் மாட்சிமையடைய மனங்கொண்ட நெல்சனுக்கு வேலையின்றி சும்மா நிற்கும் 'ஜயகலத்திலமர்ந்திருக்க' ஊக்கமும் உவப்புமற்றிருந்தது. நீராழியின் மீது இருமரக்கலங்கள் புதியநாடுகளைக்கண்டு தேடிவர வடதுருவத்தை நோக்கிப் புறப்படுகிறதென்று கேள்வியுற்று பாலன் நெல்சன் தானும் பிறதேயங்களைப் போய்பார்த்துவர அவாமேலிட்டோனாகி தன் மாமன்பால் ஏகி அனுமதிபெற்று அவரது செல்வாக்கால் கப்பலதிபனுக் கடுத்தஸ்தானத்தில் உள்ள ஒருஉத்தியோகஸ்தனிடத்தில் ஒரு சிறு படகுக் கதிகாரியாகப் போயமர்ந்தான். இந்த கப்பற்படை "நோர்" (Nore) என்ற துறைமுகம் விட்டு 1773ஆு ஜூன்மீ 4-ம்தேதி பாய்மரங்களை விரித்துக்கொண்டு புறப்பட்டது. போகும் பாட்டையிற் பலவகை இடுக்கண்களுறினும் கலங்கா நெஞ்சம் படைத்த நெல்சன் அவற்றைச்சிறிது மோராமல் உல்லாசமாகவேயிருந்தான். மூடுபனி முற்றும் செறிந்து "ஸ்பிட்ஸ்பர்கன்" (Spitzbergen) என்ற தீவைச்சார்ந்ததும் இங்ஙனம தங்கியிருக்க இயலாதென உன்னி கப்பற்றலைவன் வேறேதேனும் ஒரு துறையைக்கண்டு தனக்குத் தெரிவிக்கக் கப்பலாட்களைச் சிலரை ஏவ நெல்சனும் மனக்கிளர்ச்சி எய்தி மரக்கலமொன்றில் ஏறிக்கொண்டு புறப்பட்டான். முந்திச்

செல்லுகின்ற கப்பலாட்களை கடற்குதிரைக் கூட்டங்கள் வீராவேசத்துடன் வந்து தாக்கத் தன்படகை வேகமாய் நடத்தி விரைந்து சென்று அவ்விலங்கினங்கள் ஓலமிட்டோடச் சிதறடித்து கப்பலில் உள்ளவர்களை நெல்சன் காப்பாற்றினன். ஒருநாள் இரவில் அவன் ஒருவருமறியாமல் கப்பலைவிட்டகன்று புறம் போந்தனன். மறுநாள் வைகறையில் ஒரு பெருங்கரடியோடு கைகலந்து அமர்புரிந்து கைத்துப்பாக்கியை அடிப்புறம் திருப்பி அதைஅடிக்க இருக்கையில் கப்பலில் உள்ளோர்கள் கண்ணுற்று அம்மிருகம் மருண்டு திடுக்கிட்டோட துப்பாக்கியைச் சுட்டார்கள் கப்பற்றலைவன் நெல்சனை நோக்கி ஏன் இவ்வபாயகரமான சண்டையைச் செய்யத்துணிந்தாய் என்று கண்டித்துக்கேட்க தான் அந்தக் கரடியைக் கொன்று அதன் தோலை உரித்தெடுத்து ஊரையடைந்ததும் தந்தை கையிற் கொடுக்கவேண்டுமென்றிருந்தேனென விடை பகர்ந்தான். இவ்வரும் மரக்கலங்கள் ஆங்கிலநாடு நண்ணியதும் மாலுமிகள் அனைவர்க்கும் மரியாதை செய்தனுப்பவே, தாளாண்மையை தலையாகக் கொண்ட நெல்சன் குணதிசை நோக்கிச்செல்லும் 'கடற்குதிரை' (Seahorse) என்ற ஓர் கப்பலையடைந்தான். இக்கப்பலதிபன் இவன் நற்குணங்களையும், நன்னடக்கைகளையும் கண்டு வியந்து கப்பலில் பால்ய உத்தியோக (Midshipman) அந்தஸ்தை வகிக்க உதவிபுரிந்தான். கடல்யாத்திரையில் கைதேர்ந்து தேகவலிமையையும் பெற்றான். கீழ்த்திசையை நோக்கி நெடுந்தூரம் பிரயாணஞ் செய்து இந்தியாவரையிலும் வந்தடைந்தான். இங்ஙனே பதினெட்டுமாதம் தங்கியிருக்க நேரிட இப் பிரதேசத்தின் பகலவன் கொடுங்கிரணங்களின் தாபத்தால் தபிக்கப்பட்டு தேக மெலிவுற்று நெல்சன் காயலாவானன். வரவர தேகவாரோக்கியம் சீர்கெட்டு வந்தமைபற்றி ஊருக்குத் திரும்பிப்போக அவாமேலிட அப்போது ஆங்கிலநாட்டுக்கு பிரயாணமாயிருந்த "சாகரச்சுறு" (Dolphin) என்ற கப்பற்றளகர்த்தன் வசம் ஒப்பிவிக்கப்பட்டான். அங்கமெலிந்து, அகக்கிளர்ச்சி குன்றி ஊக்கமெனுமார்க்கத்தையுமிழந்தான். கப்பற்றொழிலைக் கற்று ஏற்றமடைய எண்ணியவெண்ணம் வீணுய்ப்போகுமோ வென ஐயமுற்று அகங் குன்றினன். கண்ணகல் ஞாலம் கங்குல்கவிந்தபின் கதிரொளிவீசி விளங்குமாபோல் அங்கம் கலங்கிய நெல்சன் உள்ளம் பொங்கி பொலிவுற்றது.

இதனால் தன் தேசாபிமானமெனும் செஞ்சுடர்க்கொழுந்து விட்டெரிய "நான் சுத்தவீரனாவேன். என் தேசமும், தேசாதிபனுந்தான் எனக்குற்ற நண்பரும், உபகாரிகளும்" என்று தனக்குள் எண்ணலானன். இக்கோள்கை பசுமரத்தில் ஆணி அறைந்தாற்போல் பதிந்து தான் உயிரோடிருக்கும் வரையில் உழைத்து உல்லாசமாய் காலங் கடத்தினன். கப்பற்றலைவன் அவனைப் பட்சமாய் பரிபாலித்து நோய் களைந்து ஊரில் கொண்டுபோய்ச் சேர்த்தான். தன் மாமன் கப்பற்படை விசாரணை கர்த்தா (Comptroller) வாக நியமனம் பெற்ற செய்தியறிந்து மகிழ்ச்சியடைந்தான். ஜிப்ரால்டர்க்கு (Gibraltar) ப்போகும் ஊர்செஸ்டர் (Worcester) என்ற உயுத்த கப்பலில் உதவி உத்யோகஸ்தனக (Ag. Lieutenant) நெல்சன் நியமனம்பெற்றான். 177௵ ஏப்ரல்மீ த்தில் உத்தியோகப் பரீட்சையில் தேறவே சமாக்க (Jamaica) நகருக்குச் செல்லும் ஓர் மரக்கலத்தில் அமர்ந்தான். ஆங்காங்குஅமர்புரிந்து ஆங்கிலம் ஆழியாட்சியடைந்து பொங்கிப்பொலிவுற்று விளங்க நல்லிசை நாட்டிய நெல்சனை ஆங்கிலேயர் இன்றளவும் போற்றிய வண்ணமாய் இருக்கின்றனர். 'நீலநதிச் சண்டை' (Battle of the Nile) செய்யப்புறப்படுகையில்

தன் சைன்யங்களைப் பார்த்து "காணே நான் இப்போரில் வென்றால் 'பியர்' (Peer) என்ற பிரபுப் பட்டம் பெறுவேன். இன்றேல் வெஸ்ட்மினிஸ்டர் இடுகாட்டில் அடக்கம் பெறுவேன்" எனப்பகர்ந்தான் அவருக்கு இராஜாங்கத்தில் 'பாரன்' (Baron) என்ற பட்டமளித்து £2000 பொன் உபகாரச்சம்பளத்தையும் உபகரித்தார்கள். உயர்தரப்பட்டமளிக்க வேண்டுமென்று "காமன்ஸ் சபையார்' (House of Commons) உத்தேசித்துக் கொண்டிருக்குமளவில்வல்லாயனும்சபாபண்டிதனுமான 'பிட்' (Mr. Pitt) என்பவர் எழுந்து அங்குற்றோரை நோக்கி "போர்க்கப்பற் கூட்டத்தலைவன் நெல்சன் (Admiral Nelson) நாட்டிய புகழ் பிராதானியரென்ற பெயருள்ளவரைப்போல் உற்று விளங்கும். சரித்திரங்களிள் எங்கும் கண்டும் கேட்டறியா கடுங்கப்பற் போரில் சுத்த வீரனாய்த்துலங்கும் இவருடைய கீர்த்தியின் ஒளி எங்கும் பரவி வீசுகையில் ஒருவரும் இவரடைந்த பட்டம் 'பாரனோ' அல்லது 'இயர்லோ' (Baron or Earl) என்று கேட்கவும் மனதில் நினையார்." எனறு எத்தியம்பினர். 'கோபன்ஹேகன்" (Copenhagen) என்னுமிடத்தில் தானியரோடு (Danes) கோரமான யுத்தம் புரிந்து அவர்களுடைய மரக்கலங்களை நிர்மூலமாக்கினதின் நிமித்தம் 'பியர்'என்ற பட்டத்திற்கும் சிறந்த 'வைகவுண்ட' (Viscount) என்ற பட்டமடைந்தார். இது நிகழ்ந்து நான்காண்டுகழித்த பின்னர் "திராபல்கர்" (Trafalgar) என்றபிரபலமான வெம்போரில் வெற்றியடைந்தார். இதில் உயிர் துறக்கும்படியான காயம் பட்டபோதிலும் வெற்றியெனுமாற்றம் காதிற்பட்ட பிறகுதான் உயிரை நீத்தனர். மேலும் எதிரிகள் மடைகலங்கி திரண்டோடுவதை காதலோடுகண்ணுற்றார். இறக்குந் தறுவாயில் தன்னருமை மாலுமிகளை நோக்கி: "கடவுள் அருள் புரிவாராக. நான் கைக்கொண்ட கடமை முடிவு பெறச் செய்துவிட்டேன்." என்று சொல்லிக்கொண்டே உயிர் துறந்தனர். ஆங்கிலேயர் இன்றளவும் இவருடைய பெயரைக் கேட்கையிலேயே உற்சாகமும், ஊக்கமும் அடைகிறார்கள் என்ற விவரத்தைப் பின்வரும் தர்சனத்தால் நிதானிக்கலாம். 'கதிரவன் உதித்தெழும் பதியாயினோர்க்கும்,' (People of the Land of the Rising Sun, *ie.*, Japan) உறவொன்றே உரிமையாக் கொண்ட "உருஷ்யருக்கும்" உலக சரித்திரங்களில் எங்கும் கண்டும் கேட்டுமறியாத கங்குல்பகலின்றி பதினெட்டுமாதம் நடந்த உக்கிரமான போரில் எப்புவியும் போற்றும் ஜப்பான் கப்பற்றலைவன் 'தோகோ' (Admiral Togo) என்பவர் ஜெயங்கொண்டார்' ஆங்கிலேயர் அளவற்ற ஆனந்தமேலிட்டு இவரை "குணதிசை நெல்சன்" (Nelson of the East) எனக் கொண்டாடினார்கள். இந்த அக்டோபர்மீ 21௳ இவர்ஜயம் பெறப் புரிந்த டிராபல்கர் யுத்தத்தின் 115-வது அப்தபூர்த்தியாதலால் சென்ற நூற்றாண்டுற்சவத்தை அத்தருணம் உலகெலாம் பரவியுள்ள ப்ரிடிஷ்ராஜ்யமெங்கும் பெருமையாகக் கொண்டாடினவர்கள் இத்தருணம் மறக்கமாட்டார்கள். ஏனெனில் பிரிடிஷ் கப்பற்படையின் உறத்தினால், தான் சண்டை எங்கும் பர இன்னல் விளைக்காது நாம் பாதுகாக்கப்பட்டு வருகிறோம். நெல்சனுடைய நாமத்தை ஆங்கில நாட்டார் இன்றளவும் போற்றுவதினால் இவர் அடைந்த கீர்த்தியின் பிரதாபம் சொல்லாமலே விளங்கும். இவரிடம் விளங்கிய பேராண்மை பகைவரும் மெச்சத்தக்க பண்பினையுடையதாக விருந்தது. இக்கருத்தை நாயனாரும்:

"பேராண்மை யென்ப தறுகணொன்
றுற்றக்கா லூராண்மை மற்றதனெஃகு"

என்று கூறியுளார்.

## LESSONS IN NATURE STUDY.

### BEES AND BEEHIVES.

### பிரகிருதி வித்யாம்சம்.

### தேனீக்களும் தேனும்.

---

(கார்த்திகைமீ ஸஞ்சிகையின் 240-ம்பக்கத்தொடர்ச்சி)

### தேன்கூடு.

இது ஈக்களின் ஜாதிக்கும் சங்கியைக்கும் தக்கபடி பெரிதாயும் சிறியதாயுமிருக்கிறது. அநேகமாய் எருமுட்டையைப்போல் வட்டமாகவும், கூடுகட்டப்படுமிடத்திற்குத் தக்கபடி நீண்ட வட்டமாகவுமிருக்கும். நாட்டுத் தேனீக்களின் கூடுகள் எவ்விடத்திலும் மூன்றங்குல கனத்திற்கு அதிகமாயிராது. எருமுட்டையின் இருபுறமும் துவாரங்களமைக்கப்பட்டு, நடுவில் இடைவெளியின்றி தடுக்கப்பட்டு, துவாரங்களெல்லாம் அறுகோணமாய்ச் செய்யப்பட்டிருந்தால் எப்படி காணப்படுமோ அப்படியே அநேகமாய்த் தேன் கூடுகள் காணப்படுகின்றன. அவ்வாறுகோண வரைகளே அவைகளுக்குத் துயிலிடமாகவும், பறக்கச் சக்தியில்லாத சிறிய ஈக்களின் உறைவிடமாகவும், முட்டையிடும் பிரசவ வீடாகவும், தேனைச் சேகரித்து வைக்கும் பண்டசாலையாகவும், உபயோகப்படுகின்றது. இவ்வறைகளுடன் கூடுமுழுவதும் மெழுகினாலே செய்யப்படுகின்றன. அறைகளெல்லாம் ஒரே அளவானதென்றே சொல்லக்கூடியதாயினும், மத்தியிலுள்ளவைகளைவிட ஓரத்திலுள்ளவைகளின் ஆழமானது குறைந்திருக்கும். தேனீக்கள் தங்கள் கூடுகளிலுள்ள இன்ன அறைகளில்தான் முட்டையிடவேண்டுமென்றும், இன்ன அறைகளில்தான் குஞ்சுகளிருக்கவேண்டுமென்றும் இன்ன அறைகளில்தான் தேன் வைக்கப்பட வேண்டுமென்றும் ஏற்பாடு செய்துக்கொள்ளுகிறதென்று கூறத்தக்கதாக கூடுகளின் ஒருபுறமுள்ள பல அறைகளில் முட்டைகளே காணப்படுகின்றன. மற்றொருபுறமுள்ள பல அறைகளில் குஞ்சுகளே உறங்குகின்றன. வேறொருபுறமுள்ள பல அறைகள் தேனினால் நிறைந்து விளங்குகின்றன. ஆகவே நாகரீகமடையாதவர்கள் வீட்டில் சமையலறையில் படுக்கையறை சாமான்களும், தரிசனவரையில் சமையல் பாத்திரங்களும் ஒழுங்கீனமாகக் காணப்படுவதுபோலன்றி, நாகரீகத்தேர்ச்சி யடைந்தவர்களுடைய வீடுகளைப்போலக் காணப்படுகின்றன. ஒரு கூண்டின் ஈக்களின்பேரில் சர்வாதிகாரம்பெற்ற இராணி ஈ வசிப்பதற்குத் தகுந்த இராஜமாளிகையெனக் கூறக்கூடிய ஒரு பெரிய அறையும், அதற்குக் கீழதிகாரிகளான சில ஈக்கள் வசிக்கத்தகுந்த, இராஜமாளிகைக்குச்சற்று சிறியதான சில அறைகளும், கூட்டின் சிகரத்திலாவது அடிப்புறத்திலாவது காணப்படுகிறது. இவ்வறைகள் மட்டும் அறுகோணமாயில்லாமல் வட்டமாயிருக்கின்றன.

### மெழுகு.

சிலந்திப்பூச்சிகள் முசுக்கொட்டைச் செடியின் இலைகளைத்தின்று தங்கள் உடலிலிருந்து உண்டாகிற ஒருவித மெல்லிய பதார்த்தத்தினால் தங்கள் கூடுகளைக் கட்டுவதுபோல, தேனீக்களும் புஷ்பங்களிலுள்ள மதுரமான தேனைக்குடித்து தம் உடலிலிருந்து உற்பத்தியாகிற மெழுகினாலேயே தம் கூடுகளைக் கட்டுகின்றன. தாங்கள் குடிக்கும் தேனையே மெழுகாக மாற்றக்கூடிய சக்தி யவைகளுக்குளது. தேனீக்கள் தாம் கூடுகட்டிக்கொண்டு வாசஞ்செய்யப்பட்ட விடத்தில் எவ்வித இடஞ்சலாவது நேர்வதாயிருந்தால், அவ்விடத்தைவிட்டு வேறு தகுந்தவிடத்தைத் தேடிக்கொண்டு பெருங் கும்பலாகப் புறப்பட்டுப் பறந்துபோவதை யநேகர் பார்த்திருக்கலாம். அப்படிப் போகும்பொழுது அவைகள் தாம் முன்னிருந்த கூண்டில் சேகரித்துவைத்த தேனை வேண்டிய அளவு குடித்துவிட்டே செல்லும். அப்படியும் குடித்துவிட்டுச்

செல்ல சாத்தியப்படாவிட்டால், தாம் வேறு புகலிடம் கண்டுபிடிக்கச் செல்லும் மார்க்கத்திலுள்ள செடிகளின் புஷ்பங்களிலுள்ள தேனை ஏராளமாய்க்குடித்து, கடைசியில் ஓரிடத்தில் சபைகூடும். அதாவது அதிக காற்றில்லாததும் வெயிலடிக்கக் கூடியதுமான ஓரிடத்தில் மரக்கிளையொன்றைப் பற்றி சில ஈக்கள் உட்கார, அவைகளின்பேரில் வேறு சில ஈக்கள் உட்கார, இப்படியே ஒன்றின் பேரிலொன்றாக எல்லா ஈக்களுமுட்கார்ந்து பெருங்கும்பலாக சுமார் ஒருநாளெல்லாம் தொங்கிக் கொண்டேயிருக்கும்.

இவைகளிப்படியிருக்க, மேற்திகாரிகளான சில ஈக்கள் தகுந்த புகலிடத்தைத் தேடிக் கண்டுவந்து இவைகளுக்குத் தெரிவித்து, அவ்விடத்திற்கு இவைகளையழைத்துக் கொண்டுசெல்லும். இப்படிப் புதியவிடத்திற்குச் செல்லுமுன் ஒரு மரக்கிளையைப் பற்றிக்கொண்டு தபசிகளைப்போல் தொங்கிக்கொண்டிருந்ததை சபையென்று கூறினோமன்றோ. சபையின் நடவடிக்கைகளை நீங்கள் அறியவேண்டியது அவசியமாதலால் அதையும் கூறுவோம்.

---

## CONDOLENCE.
## துயராற்றல்

" ஆறாத்துயரமெல்லாம் ஆற்றுவதோ ஈசன் அருள்."

I

" அப்பனீ அம்மனீ அய்யனீ
அன்புடைய மாமனும் மாமியும்நீ
ஒப்புடைய தாரமும் உண்பொருளு'நீ
ஓர் குலமும் சுற்றமும் ஒருரும் நீ
துணையாய் என்னெஞ்சம் துறப்பிப்பாய்நீ
இப்பொன்நீ, இம் ணிநீ, இம்முத்துநீ,
 றைவநீ, ஏறூர்ந்தசெல்வம நீயே!"

II

அன்புநீ யருளும்நீ யமுத'நீ
துன்புநீ துக்கம்நீ துயரு'நீ
என்புநீ எரியும்நீ எய்ப்பு'நீ
வன்புநீ வடிவுநீ வழக்கு'நீ
*மன்றநீ மரபுநீ மாரன்நீ
அன்றுநீ இன்றுநீ என்றும்நீ
என்றரற்றிக் கற்றுபோற் கதறினேன்
வெந்துயர்தீர் அம்மானே! அரங்கேசனே!

* மன்று - சபை, அரங்கம்.

---

### * LOOK AT THE STAGE! AND DRINK OF THE BLISS OF LOVING THOUGHT.

### இராமானுஜபஜனை - திருவரங்க தரிசனம்.

முன்னுரை.

† " துவாதசி இன்றைக்"சென்றான்
துவம்பத லக்ஷியராமன்
துவாதசி அன்றைக் கென்னைத்
துவம்பத லக்ஷியனுண்டான்!
துவாதசி என்றைக் சென்றால்
துவம்பத லக்ஷியங்கண்டால்:
துவாதசி ஒன்றைக் கொண்டே§
துவம்பத லக்ஷியந்தந்தான்.

துவம்பத லக்ஷியம்$ :—"அமலன் ஆதிபிரான்."

" அப்பநீ அம்மநீ அய்யநீ
அன்புடைய மாமனும் மாமியுநீ
ஒப்புடையதாரமும் உண் பொருளுநீ:
ஓர்குலமும் சுற்றமும் ஒருரும்நீ
துணையா யென்னெஞ்சம் துறப்பிப்பாய்நீ
இப்பொன்நீ, இம்மணிநீ இம்முத்துநீ!
இறைவநீ! ஏறூர்ந்த செல்வம்நீயே!"

---

* Tirupzpanazhvar's Original rendered into Sanskrit By Mr. M. K. Tatacharyar, B.A.

† The 'Watchord' giving admittance to the Presence.

" துவாதசி இன்றைக்கு" என்றால் (ஞானசந்திரனின்) பன்னிரண்டாங்கலை தரிசனம் பார்' என்று அர்த்தம். "குருசொல் ஒருசொல்" என்றபடி இக் குறிச்சொல்லை' (Watchword) க்கொண்டு கடைத்தேறுவார் உத்தமசாதக புருஷர். சாத்தியருக்கு இது சாமான்யம்.

cf. "தசமியிலே சாகரத்துக் கப்பாலேறிச் சிலம்பொலியுமனதுடைய இருக்கால்கண்டு, விஜமாக ஸ்தூல சூக்ஷமத்தில்தோன்றி, லக்ஷணத்தில் நீயும் நானும் ஒன்றேயாகி, அறிவில்லா ஆனந்தமயமேயாகி, அருள்வெளியாய் வரமருள்வாய் அகண்டரூபி, சுசி வழியாய் சுசிமுகமாய்ப் பின்னைமுகம் பார்த்தாள்வாய் சோதியே, மனோன்மணியே, சுதினவாழ்வே!"

§ 'துவாதசநாமங்கள் வாய்ந்த அருட்சக்தி ஒன்றைக்கொண்டே' யென்று அர்த்தம். "பூரணி, புராதனி, சுமங்கலை, சுதந்தரி, புராந்தகி, - த்ரியம்பிகே, எழிற்புங்கவி, விளங்கு சிவசங்கரி ஸஹஸ்ரதள மலர் மீதுறை அம்பிகே, - நாரணிமனோதீத நாயகி குணாதீத, நாதாந்த சக்தியென்றுன் நாமமே யுச்சரித்திடுமடியர் நாமமேயானுச்சரிக்க வசமோ!"—என்றார் பிறரும் காண்க.

$ (வாக்கீசர் அருளிச்செய்த ஷோடசாந்தர "துவம்பதலக்ஷிதம்.")

ஸ்ரீ:

## " அமலன் ஆதிபிரான்."

(திருப்பாணாழ்வார் அருளிச்செய்தது.)

1. அகப்பொருள் காண்டல்.

அமலன் ஆதிபிரான் அடியார்க்கென்னை ஆட்படுத்த
விமலன் விண்ணவர்கோன் விரைஆர் பொழில்வேங்
[கடவன்
நிமலன் நின்மலன் நீதிவாணன் நீள்மதிள் அரங்கத்து
[அம்மான் திருக்
கமலபாதம் வந்தென் கண்ணினுள்ளன வொக்கின்
[றதே.

2. உள்ளக் கவர்ச்சி.

உவந்த உள்ளத்தனாய் உலகமளந்து அண்டமுற
நிவர்ந்த நீள்முடியன் அன்றுநேர்ந்த நிசாசரரைக்
கவர்ந்தவெங்கணைக் காகுத்தன் கடியார்பொழில்அரங்
[கத்தம்மான் அரைச்
சிவந்தஆடையின்மேல் சென்றதாமென் சிந்தனையே.

3. உயிர்த்தானம்.

மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள்
சந்திசெய்யநின்றான் அரங்கத்தரவின்அணையான்
அந்திபோல் நிறத்து ஆடையும் அதன்மேல் அயனைப்
[படைத்ததோர் எழில்
உந்திமேலதன்றோ அடியேன்உள்ளத்து இன்னுயிரே.

4. உதரபந்தம் : உள்ளத்துஉலா.

சதிரமாமதிள் சூழ்இலங்கைக் கிறைவன் தலைபத்து
உதிரவோட்டிஓர்வெங்கணையுய்த்தவன் ஓதவண்ணன்
மதுரமாவண்டுபாடமாமயிலாடரங்கத்தம்மான் திரு
வயிற்று உதரபந்தம் என்னுள்ளத்துள் நின்று உலா
[கின்றதே.

5. 'பாரிது மாரில் அதிர்சயம் ஸ்வஸ்வா :

பாரமாய பழவினை பற்றறுத்து என்னைத்தன்
வாரமாக்கி வைத்தான் வைத்ததன்றி யென்னுள்புகுந்
[தான்
கோரமாதவஞ் செய்தனன்கொல் அறியேன் அரங்கத்
[தம்மான் திரு
வார‡மார்பதன்றோ அடியேனை ஆட்கொண்டதே.

6. 'எனையுய்யக் கொண்ட'கண்டம்.

துண்டவெண்பிறையான் துயர்தீர்த்தவன் அஞ்சிறைய
வண்டுவாழ் பொழில்சூழ் அரங்கநகர்மேயஅப்பன்
அண்டரண்ட பகிரண்டத் தொருமாநிலம் எழுமால்
[வரை முற்றும்
உண்டகண்டம்கண்டீர் அடியேனைஉய்யக்கொண்டதே.

7. 'உள்ளம்கவர்கள்வன்.'

கையினார் சுரிசங்கம் அனலாழியர் நீள்வரைபோல்
மெய்யனார் துளபவிரையார் கமழ்நீள்முடியெம் [ஐயனார்
ஐயனார் அணியரங்கனார் அரவினணைமிசை மேயமாயனார்
செய்யவாய் அய்யோ! என்னைச்சிந்தை கவர்ந்ததுவே.

8. 'பேதமை' பேன்பது மாதரிக்கணிகலம்.

பரியனாகிவந்த அவுணன்உடல்கீண்ட அமரர்க்
கரியஆதிப்பிரான் அரங்கத்து அமலன் முகத்துக்
கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி
[நீண்டஅப்
பெரியவாய கண்கள் என்னைப்பேதமைசெய்தனவே.

9. 'நிறைதுறை சிறைநிறை.'

ஆலமாமரத்தின் இலைமேல் ஒருபாலகனாய்
ஞாலம் ஏழுமுண்டான் அரங்கத்து அரவின் அணையான்
கோலமாமணியாரமும் முத்துத்தாமமும் முடிவில்லது
[தோர் எழில்
நீலமேனி அய்யோ! நிறைகொண்டதென் நெஞ்சினை
[யே.

10. 'கண்டகண்காணுக்' காட்சிநிலை.

கொண்டல் வண்ணனைக் கோவலனாய் வெண்ணெய்
உண்டவாயன் என்னுள்ளம் கவர்ந்தானை
அண்டர்கோன் அணியரங்கன் என் அமுதினைக்
கண்டகண்கள் மற்றொன்றினைக் காணாவே.

பின்னுரை.

'திருக்கூத்து தரிசனங்கண்டகண்'-

" நன்றிது ஆட்டம்! நன்றிது கூத்து!
நன்று நன்றிது நடனம்!
அங்குமிங்கு மெங்குங்கண்டிலே
னிதுவொரு அதிர்சயங்காண்மினோ
ஒன்றிநின்றன் றுணர் வழிந்துள்
ளொளியானபின்
அங்குமிங்கு மெங்குமிதுவலால்
வேறொரு அதிர்சயம் காண்கிலேனே!"

திருவரங்கத்து அரவணையான் தரிசனங்காணல்.

" நன்றிது தூக்கம் நன்றிது ஊக்கம்
நன்று நன்றிது நாட்டம்!
அங்குமிங்கு மெங்குங்கண்டிலே
னரவணையானறிதுயில் காண்மினோ
ஒன்றி நின்றன் றுணர் வழிந்துள்
ளொளியானபின்
நன்றுமின்று மென்று மிவனறிதுயிலலால்
வேறொரு துயில்காண்டிலனே!"

‡ திருஹாரமார்பு - திருஆரமார்பு - திருவாரமார்பு.

## PHYSICAL CULTURE AS PRACTICED BY PROF. RAMAMURTI.

### தேஹப்பயிற்சி.

பீம அபிநவ இராமமூர்த்தி யுதாரணம்.

---

தேஹப்பயிற்சிக்கு மனப்பயிற்சி இன்றி யமையாத சாதனமெனக்காட்ட இப்பொழுது சென்னைக்கோட்டை மைதான வெளியில் கூடாரமடித்து வித்தையாடிவரும் பீமனைப் போல தேஹதாட்டியமுடைய இராமமூர்த்தி யவர்களுடைய உதாரணம் பின்பற்றத் தக்கது. அவர் 'ஸாண்டோ' வந்து வித்தையாடிப் போனதைப்பார்த்து தானும் அப்படியாக வேண்டுமென்கிற அவாத்தூண்ட தன் தேஹப் பயிற்சியில் முக்கிய லக்ஷியம் வைப்பவரானார். அவருடைய விருதங்களாவன:—

(1) நித்தியம் பிராணயமம் செய்யல்.

(2) ஏகாக்ரசித்த ஸ்வாதீன அப்பியாசம்.

(3) மாம்ஸாகாரமின்றி தானியம், இலை, காய், கனி, கிழங்குகளையே புசித்துவருதல்.

(4) காபி முதற்கொண்டு அற்பஸ்வற்பமான லாஹிரி யுண்டுபண்ணும் எல்லா வஸ்துக்களை யும் மதுபானத்துக்குச் சமானமாகவெண்ணி அறவிலக்கல் ;

(5) பிரஹ்மசரியம்.

இந்தப் பஞ்சசாதனங்களைக்கொண்டு அவர் செய்திருக்கும் தேஹப்பயிற்சி அபாரமானதா யிருக்கிறது. அவர் ஒரு யானையைச் சுமக்கிறார். மோட்டார் வண்டியை அவர் மேலோட்ட விட்டு அதன் கீழிருந்து நசுங்கிப்போகாமல் அதன் பளுவைத்தாங்குகிறார். சங்கலியைக் கழுத்தில் கட்டி மாட்டியறுத்துவிடுகிறார். அப்படியே மாரில்கட்டியும் அறுத்துவிடுகிறார். இன்னம் அதிஸாஹஸமான பீமவித்தைகள் எத்தனையோ செய்கிறார். இதற்கெல்லாம் அனுகூல சாதனமாயிருப்பது மேலேசொன்ன பஞ்சசாதனங்களைத் தவிர வேறில்லை. ஆகையால்தான் பிராம்மணச் சிறுவர்களுக்கும் துவிஜர்களுக்கும் இளம்பருவத்திலேயே இந்த பஞ்ச விருதங்களும் அனுஷ்டிக்க ஆதாரமாக விருக்கப் பூணூல்போடுகிற சம்பிரதாயம் நமக்குள் ஏற்பட்டிருக்கிறது. இதைக் காசுபறிப் பதில் கண் பஞ்சடைந்த பிராமணர்கள் இப்பொழுது மேலுக்குமட்டுமே அனுஷ்டித்து பிராணயாமம் முதலிய அப்பியாசங்களை அற விட்டு வருகிறார்கள். இவர்கள் பள்ளியிற் படித்து கலாசாலையில் மூளைக்கு வலிகொடுக்கும் பாடங்கள் பயிலும்போது அப் படிப்பின் கடுமைதாங்காது மூளை கெட்டுப்போகிறது. காபித்தண்ணீரோடு காசுபணம் கையில்சேர்ந்தால் மதுபானம் முதலான தோஷங்களும்சேர மதுரோகத்துக்கு ஆளாகி ராஜப்பிளவை புறப்பட்டு அற்ப ஆயுளில் மாண்டுமடிந்து இருந்த இடந்தெரியாமல் போகிறார்கள். இதுதான் நிர்ப்பந்தமுறையை அனுசரித்துப் போதிக்கும் படிப்புத்தரும் கடைசிப்பலன். "தானாகக் கனியாதது தடியெடுத்தடித்ததால் கனிந்து விடுமா?" என்கிற பழமொழியைச் சிந்திக்கவும்.

### அபிநவபீம இராமமூர்த்தி.

(By a Pupil of the V form.)

---

1. கண்காணப் பருத்துயர்ந்த
   கடகம் விளங்கு தோளினன்
காவலர்கள் கண்களிக்கக்
   கனசிரமம் பயிற்றுவான்
மின்னனை வொளிதயங்கு
   மேனிகொண்ட மித்திரன்
விண்ணும் மண்ணும் விறல்படைத்த
   விஜய வீரகேசரி
தன்னுண்மை யுலகெங்குந்
   தயங்கவைத்த தகைமையோன்

தாணியாளர் மெச்சவந்த
தகுதிபெற்ற வீரர்கோன்
எந்நாளும் எத்திசையும்
இன்புறுத்தும் ராமமூர்த்தி
இவனை நாமெல்லோரும்
ஏத்திப் புகழ்வம் வாருமே.

2. அன்றிருளில் தனியறையில்
அறுத்தான் தந்தை தாய்தளையை
அநகன் அசோதை பரிந்தளித்த
அழகார் கண்ணனெம்பிரான்
இன்று தரணியெங்குஞ் சென்று
எழிலார்ந்த ராமமூர்த்தி
ஏற்றவரிசை பெற்றுயர்ந்து
எங்கள் பாண்டி யாஜியின்
மன்றில் பகலில் பலமனிதர்
மருங்குநின்று காணவே
மகிழ்வோ டறுத்தான் தன்னை
வரிந்த இரும்புச் சங்கலியை
நன்று நன்று நண்பினரே
நன்குவந்து காண்மினே
நாடி லிவனுக்கி யாவரிணை
நாணிலத்தில் நவிலுமே.

3. கொல்லானை தன்முதுகிற்
கொண்டுயர்ந்த வீரர்கோன்
கொம்மை கொட்டிக் குறங்கறுக்குங்
கோதில் கலிங்கர் கோமகன்
எல்லார்ந்த விருஞ்சுடரும்
மதியும்போல வெழிலிருந்த
இன்முகத்தன் இராமமூர்த்தி
எங்கள் தேயம் விளங்கவே
கல்லார்ந்த பலநாடும் கருங்கடலுங்
கடந்து சென்று
ககனமு மெண்டிசையுங்
களிக்க வீறு பெற்றுயர்ந்து
பல்லாண்டு பல்லாண்டு
பாரில் பலமாண்பு பெற்றுப்
பார்த்திபர்கள் மெச்ச வாழ்க
பாடல்பெற்று வாழ்கவே.

## EVENTS OF THE MONTH.

## மாத விசேஷங்கள்.

### தனுர்மாச விசேஷம்.

"மார்கழிமாசம் திருவாதிரையும் வரப்போகுதையே!"

இந்தமாசத்தில் முக்கியமாய் கவனிக்கத்தக்க விசேஷமென்னவென்றால் சூரியன் விருச்சிக ராசியிலிருந்து தனுசுக்கு நகர்ந்ததே. தனுசில் சூரியன் பிரவேசிக்கவும் மார்கழிமாசம் பிறந்தது. இது தேவர்களுக்கு பிரஹ்ம முகூர்த்தகாலம் என்பர். அப்படியென்றால் விடியற்காலம். அசுரர்கள் கொட்டம் அடங்க தேவர்கள் கஷ்டம்நீங்க (விடிய) அவர்களுக்கு நல்ல காலம் பிறக்கும் மாசம் இது. இந்தமாசம் திருவாதிரை நக்ஷத்திரத்தில் பரமசிவன் சகளவுருக்கொண்டு "பாரிலுள்ள பக்தர்கள் பரிபக்குவர் பலருமுய்யப் பரங்கருணை மிகுதியாலே, திரிபுரமெரித்ததேஜோமயனுந்தனைத் தாள் கொடுத்தாள்வன், தரிசிக்க வாரீர் வாரீரே!"—என்றபடி தரிசனமளிப்பர். இதற்குத்தான் "ஆருத்ரா தரிசன"மென்று சொல்லுகின்றது. இது சிதம்பரத்தில் விசேஷ வைபவத்தோடு நடந்தேறும். இது இந்த மார்கழிமீ 25உ திங்கட்கிழமை யன்று (ஜனவரிமீ 8உ) சம்பவிக்கிறது.

"திருப்பொறசுண்ணம்."

இந்தமாசம் பிறந்ததுமுதல் பக்தர்களெல்லாரும் பகவானைப் பாடிதுதித்துக் கொண்டாடுவார்கள். "எம்கோன் எம்கூத்தன் தேவியும் தானும்வந்து எம்மையாள செம்பொன் செய் சுண்ணமிடித்துப்" பாடியாடி விளையாடுவது பூர்வவழக்கம். இதை மணிவாசகப்பெருமான் திருப்பொற்சுண்ணம் என்கிற பதிகத்தில் வெகு அழகாகப் பாடியிருக்கிறார். இந்த திருப்பொற் சுண்ணமிடித்து விளையாடுவதின் உட்கருத்து "ஆனந்தமனோலயம்." இதையே என்தாய் "போகப்போகப் பொன்னம்பலமாம்" என்றாள். இப்படி சங்கற்ப விகற்ப ரூபமாய் (நினைப்பு மறப்புமாயிருந்து) அறிவை விஷயப்பற்றில் சிக்கவைத்து அது தெளிவறச்

செய்வது நினைப்புமறப்பில் பழகிப்பழகி விஷய வாசனை தடித்தமனமாம். அந்தமனசை இடித்துப்பொடித்துத் தூளாக்கிப் 'பொற்சுண்ணம்' செய்து பகவான் பிறக்குங்காலையில் அவருக்கு மங்கலவாழ்த்தாகத் தூவுவது இயறகை தர்மத்தையொட்டிய ஸர்ஜ்ஜனர் சம்பிரதாயம். இப்படி 'பொற்சுண்ணம்' இடிப்பது (நல்லமனதைச் சுத்தமனதாய் சுபவாசனை நிறைந்ததாகச்செய்வது) எப்படியென்றால்,

(1) வையகம் (உலகம் எல்லாம்) உரலதாக

(2) மஹாமேரு என்னும் உலக்கை நாட்டி

(3) மெய்யெனும் மஞ்சள் நிறையவட்டி

(4) கடவுளின்செய்ய திருவடியாடிப் பாடி

(5) செம்பொன் உலக்கை வலக்கைபற்றி

(6) ஐயன் அணியதில்லைவாணனுக்கு (மஞ்சள்நீர்) ஆடப்,

(7) பொற்சுண்ணம் இடித்துவைப்போம் வாருங்கள் என்கிறார்.

இப்படி இடிக்கும்பொழுது அறிவெனும் பெண்ணினம் கூட்டமாகக்கூடி (ஸமஷ்டி பாவத்திற்பொருந்தி) சித் உருவாகி,

(1) முத்தணி கொங்கைகள் ஆடவாட

(2) மொய்குழல் (தலைமயிரில் மொய்க்கும்) வண்டினம் ஆட ஆடச்

(3) சித்தம் சிவனொடும் ஆட ஆடச்

(4) செங்கயல் (ஒத்த) கண்பனி (வியர்வை நீர் அல்லது அமிர்தவூறல்) ஆட ஆட

(5) பித்து (ஏகாக்ர மிகுதியால் பித்தேறிய சித்தம்) பிரானொடும் (பகவானோடு) ஆட ஆட,

(6) பிறவி பிறரொடு (பிறவி முதலான ஸம்ஸார துக்கங்களெல்லாம் பறந்தோடி) ஆட ஆட,

(7) அத்தன் (அப்பன்) கருணை மிகுதியால் ஆனந்த நிருத்தம்செய்து காட்டி ஆட ஆட,

(8) இத்தனை வைபவங்களைக் கண்டு களியாட பொற்சுண்ணமிடித்து ஆடிப்பாடி விளையாடுவோம் வாருங்கள்.

'ஸர்வம்நாஸ்தி' 'பகவன் ஆஸ்தி.'

இந்த திருமைலாப்பூரில் இந்த சம்பிரதாயத்தை யொட்டி யூனிவர்ஸிடி பட்டதாரிகள் என்ன, பெரிய பெரிய உத்யோகஸ்தர்கள் என்ன, வக்கீல்கள் என்ன இவர்கள் எல்லாரும் காலையிலெழுந்து நீராடித் தூய்மடியுடுத்து பாகவத சின்னங்களோடு வெளிப்புறப்பட்டு பஜனை செய்துகொண்டு வீதிவலம் வருகிற காட்சி இந்தக்காலத்தின் விசேஷத்தை விளக்கும் ஓர் அற்புதக்காட்சியாக விருக்கிறது. படித்தவர்களும் பாமரர்களும் இப்படி விடியற்காலத்திலெழுந்து பகவானைத்துதித்துக் கல்லானமனம் மஞ்சளாக (சுபவாசனை பொருந்தியதாக) மாற, அம்மஞ்சனை மேற்கூறியவாறு பொற்சுண்ணமிடித்து பகவானுக்குத் திருமஞ்சன நீர் ஆடத் தயாரிப்பது ஒருபெரிய விசேஷமென்றே கண்டு குறிப்பிடலானோம். "நிர்வாணதேசத்தில் கோவணம் கட்டினவன் பைத்தியக்காரன்" என்பது பழமொழி. அதுபோல ஜனங்கள் பணச்செருக்கில் மூழ்கி நாஸ்திகபாவம் தடித்துள்ளபொழுது பகவத்சிந்தனை உள்ளவன் பைத்தியக்காரனாக விளங்கினான். நாஸ்திகசிந்தனை முற்றி முதிர்ந்து "ஸர்வம் நாஸ்தி" யென்கிற பலனைக்கொடுக்கிறபொழுது அதன்கசப்புப் பொறுக்காமல் அதுவே மருமருந்தாக உதவி ஆஸ்திகசிந்தனை மேலிட்டுக்காட்டுவது மனதுக்குப் பூரிப்பைத் தருவதாக விருக்கிறது. 'ஸர்வம்நாஸ்தி' யான பின்னரே 'பகவன் ஆஸ்தி' என்கிற ஆஸ்திக புத்தி சித்திப்பதும் சகஜந்தானே.

DURBAR DAY CALEBRATION

மற்றொரு விசேஷசம்பவம் என்னவெனில், இந்த டிசெம்பர்மீ 12உ பள்ளிக்கூடங்களிலெல்லாம் டில்லிதர்பார் நாள் கொண்டாடப்பட்டது. அந்தக் கொண்டாட்டத்துக்குதாரணமாக திருச்சினாப்பள்ளி சர்க்கார் போதனாமுறைப்பாடசாலைத்தலைவர் நமக்கெழுதியதைக் கீழே பிரசுரிக்கிறோம்:—

### திருச்சினப்பள்ளி சர்க்கார் போதனுமுறைப் பாடசாலையில் டில்லி தர்பார் தினக் கொண்டாட்டம்.

இராஜதம்பதிகளின் உருவப்படம் உன்னதமாய் மேடையின்மீதுவைத்து அலங்கரிக்கப்பட்டிருந்தது. நகரவாசிகளில் சில முக்யஸ்தர்களும் உத்தியோகஸ்தர்களும் மாணவர்களின் பெற்ருேர்களும் வந்திருந்தார்கள். ஐந்தாவதுவட்டம் பள்ளிக்கூட இன்ஸ்பெக்டராகிய மகா-ள-ள-ஸ்ரீ இராமசாமி ஐயங்கார் அவர்கள். B. A. L. T. சபா நாயகராய் அமர்ந்திருந்தார்கள். பள்ளியின் சிருர்கள் வாணிதுதி நல்வரவு ராஜபக்தி சுகாதாரம் இவைகளைப்பற்றிய பாக்களை இனிய ராகத்துடனும் மெல்லிய குரலுடனும் பாடினுர்கள். அவர்களுக்கு திருப்தியாய் சிற்றுண்டிகள் வழங்கப்பெற்றனர். பிறகோர் புகைப்படம் எடுக்கப்பட்டது.

2. பின்னர் சங்கீதக் கச்சேரி நடந்தேறியது. உபாத்தியாய மாணவர்கள் வனபரிபாலன பாக்களை செவ்வனே பாடினுர்கள். திருச்சினப்பள்ளி சப்ரிஜிஸ்தரார் மகா-ள-ள-ஸ்ரீ P. K. கல்யாணராமசாஸ்திரிகள் அவர்கள் B. A. இராஜவிஸ்வாசத்தைப்பற்றி இதிகாசபுராணங்களினின்றும் மேற்கோள்கள் எடுத்துக்காட்டி சிறந்ததோர் உபன்யாசம்செய்தார்கள். விசேஷ கரகோஷத்தின் மத்தியில் எழுந்த சபா நாயகரவர்கள் இத்தினக் கொண்டாட்டத்தின் அவசியத்தைப்பற்றி வேண்டிய காரணங்களுடன் மிக வினயமான பிரசங்கத்தை ஆங்கிலத்தில் செய்தார்கள். நமது காருண்ய அரசருக்கும் அவரைச்சார்ந்த நட்பரசர்கட்கும் சீக்கிரம் வெற்றியுண்டாக ஆர்வத்துடன் பிரார்த்தித்தார்கள். அதன் விஷயத்தை ஆங்கில மறியாதவர்கட்கு தமிழிற் சொல்லவேண்ட பள்ளிக்கூடத் தலைமை உபாத்தியாயர் மகா-ள-ள-ஸ்ரீ P. சுப்பிரமண்ய ஐயர் அவர்கள் B. A., L. T. எல்லோருக்கும் எளிதில் விளங்கும் வண்ணம் மொழிபெயர்த்துக் கூறினர். பிறகு வந்தனங்கள் கூறப்பட்டும் சந்தனபுஷ்ப தாம்பூலாதிகள் வழங்கப்பட்டும் இராஜ வாழ்த்து இராஜ மங்களம் பாடப்பட்டும் மாகூஷிமை அரசு அரசிகட்கு மும்சீர் கூறப்பட்டும் வெகு சந்தோஷத்துடன் தர்பார் தினக்கொண்டாட்டம் திருப்திகரமாகப் பூர்ணமடைந்தது?

### கவர்ன்மெண்டு மாறுதல்.

மற்ருெரு முக்கிய விஷயம் என்னவென்ருல், சீமையில் முதல் மந்திரியாகவிருந்த மிஸ்டர் ஆஸ்குவித் அவர்கள் அவர் வேலையை இராஜிநாமா கொடுத்துவிட்டார். யுத்தம் நடத்துகிற விஷயத்தில் யுத்தமந்திராலோசனை சபையில் மெம்பரா யிருந்தவர்களுக்குள் ஏதோ அபிப்பிராயபேதம் தோன்ற மிஸ்டர் ஆஸ்குவித் தமது வேலையை இராஜிநாமா கொடுத்துவிட்டார். அவருடன் அவர் கக்ஷியைச் சேர்ந்தவர்களும், இராசிநாமா கொடுத்துவிட்டார்கள். மிஸ்டர் போனர் லா அவர்கள் தம்மால் புதிய கவர்ன்மெண்டு ஏற்படுத்தி நடத்தும் பொறுப்பை வகிக்க முடியாதென்று சொல்ல, மிஸ்டர் லாய்ட்ஜியார்ஜ் அவர்கள் அப்பொறுப்பை வகித்து அரசரின் ஆஜ்ஞையினுல் புதிய மந்திராலோசனை சபையேற்படுத்தியிருக்கிருர். அந்த சபையில் யுத்த சம்பந்தமான கௌன்சிலைச் சேர்ந்தவர்கள் ஐந்தேபேர்தான். இவர்களைத்தவிர மற்றவர்களெல்லாம் அவரவர் இலாகா வேலைகளைப் பார்த்து வருவார்கள். அவர்கள் பேர் விவரம்:

### WAR CABINET.

(1) மிஸ்டர் லாய்ட் ஜார்ஜ்-முதல் மந்திரி.

(2) லார்ட் கர்ஸன் (கௌன்ஸில் ப்ரெஸிடெண்ட்) லார்ட்ஸ் சபையில் பிரதமஸ்தர்.

(3) மிஸ்டர் போனர் லா (அரசிறை மந்திரி) காமன்ஸ சபையில் பிரதமஸ்தர்.

(4) மிஸ்டர் ஹெண்டர்ஸன்.

(5) லார்ட் மில்னர்.

இந்தியாமந்திரி வேலையில் முன்னிருந்த மிஸ்டர் ஆஸ்டின் சாப்பர்லென் தானே இப்பொழுது மிருக்கிறார்.

வேதாரண்யம் சர்க்கார் பெண்பாடசாலையின் வருஷோற்சவம்நாளது டிஸெம்பர்மீ 3உ வழங்கப்பெற்றதென்றும் அத்தருணம் பாலிகைகளுக்குப் பரிசளிக்கும் காரியம் வெகு விமரிசையாக நடந்ததென்றும் அப்பாடசாலைத் தலைவர் தெரிவித்திருக்கிறார்.

பெங்கால் கவர்னர்:—சென்னையில் கவர்னராயிருந்து வங்காளத்துக்கு முதல் கவர்னராக மாற்றப்பெற்றுச் சென்ற லார்ட் கார்மிகேல் அவர்களுக்கு 5-வருஷ தவணையாய்விடுகிறபடியால் அவருக்குப்பின் லார்ட் ரோனால்ட்ஷே யென்பவர் கவர்னராக நியமிக்கப்பெற்றிருக்கிறார். இவருடைப நியமனம் வங்காளத்தாருக்கு இசைந்ததாகவில்லை யென்கிறார்கள். இந்தியா மந்திரியோ அவர்தான் அவ்வேலைக்கேற்றவர் என்று சொல்லிவிட்டார்.

---

## WANTED GREAT "MISSIONARIES OF EDUCATION."

Speaking at a meeting of educational workers, Lord Haldane declared it to be his wish to devote the remaining days of his life to being a missionary on the great question of Education. Germany knew the value of Education. "When peace came," Lord Haldane said, "they would hear no more in Germany about 16-inch guns, but they would hear a great deal about continuation schools. The Germans were training up a generation of skilled workmen with whom we would not compete. We had to be upsides with Germany in this matter. We must take care to train the children of our working classes in at least as good a way as the Germans had been able to train theirs, If we cared enough, educational developments and reforms could be forced through. The State would find the money, for unless it was spent, the nation would drop out in the race. A great Education system was an expensive thing, but it was our duty to make it the first quetion to be considered after the War." What India wants at present even more than England does, is great "Missionaries of Education" like Lord Haldane and Sir Rabindranath Tagore.

## THE DIFFICULTIES IN OUR WAY.

(BY THE MANAGING AGENTS.)

## பத்திரிகைகளின் கஷ்டநஷ்டங்கள்.

பத்திரிகைகள் நடத்துவதிலுள்ள கஷ்டநஷ்டங்களை அதை வாங்கி வாசிப்பவரும் இதரரும் அறிவதில்லை. அறியாததுமன்றி அவர்கள் நடத்தையினால் பத்திரிகைகளின் கஷ்டநஷ்டங்களை அதிகரிக்கச்செய்து வருகிறார்கள். சந்தா தொகையைக் கறாராக முன்னிட்டு அனுப்பவேண்டுமென்கிற நிபந்தனை எல்லாப் பத்திரிகைகளுக்கும் உண்டு. கறாராக முன்பணம் கட்ட இயலாதவர்களுக்கு தவணை வேண்டி கடன் கொடுத்தால் அதற்கு அதிக சந்தா ஏற்பட்டிருப்பதுமுண்டு. "எருதின் நோய் காக்கையறியுமா?" என்கிறபடி, பத்திரிகையைப் படிக்கமட்டும் ஆவல்கொண்டு பணம் கட்டப் பின்னடைகிறவர்கள் பத்திரிகை நடத்துவதிலுள்ள கஷ்டநஷ்டங்களை யறியாது இடறு விளைப்பதன்றி பாக்கியைச் செலுத்தக் கேட்டால் திடீரென்று "பத்திரிகையை நிறுத்திவிடு" என்று எழுதிவிட்டு கடனைச் செலுத்தாமல் நம்பிக்கைமோசம் செய்து ருணபாதகர்களாகிறார்கள். ஆளுக்கு ஒரு காபி வாங்கி வருகிறதானால் ஏதோசிலர் அயோக்கியர்களாயிருக்கவாவது நடக்கவாவது காணப்பட்டால் அவர்களை விலக்கிவிடலாம். நூறு, ஐம்பது பாடசாலைகளுக்கு மானேஜர்களாயிருக்கப்பட்டவர்கள் தாங்கள் பொதுஜன காரியங்களை பொதுஜன நன்மைக்காக நடத்த ஏற்பட்டவர்கள் என்பதை மறந்து, பத்திரிகையை நூறு ஐம்பதுக்கு கடன் அனுப்பச்சொல்லிவிட்டு ஒரு வருஷம் இரண்டு வருஷம் ஆகியும் பணத்தைச் செலுத்தாமல் வல்லடிவழக்குக்கூறி பொதுஜன காலத்தையும் சிப்பந்திகள் வேலையையும் வீண்வழியில் உபயோகிப்பதன்றி, காரியஸ்தர்களான பத்திரிகை மானேஜர்களின் காலத்தையும் வீண்போக்கி அனாவசியமான கஷ்டநஷ்டங்களை யுண்டுபண்ணுகிறார்

கள். புரோகிதனுக்குத் தாசில்வேலை கொடுத்தமாதிரியாக, பொதுநலகாட்டம் படியாதவர்களுக்கு அதிகாரம் கொடுத்து விடுவதால் விளையும் அநர்த்தம் மிகுதியாயிருக்கிறது. இவர்கள் பொது நலஸ்தாபனங்களின் காரிய விசாரணை கர்த்தர்களாயிருக்கிற முறையில் பிறரை நம்பவைத்து கடன் பட்டுக் கடனைத்தீர்க்கவும் முடைசெய்து தங்கள் சொந்த கௌரவத்தைக் குறைத்துக்கொள்வதன்றி பொதுவாயுள்ள ஸ்தாபனங்களின் நாணயத்துக்கும் குறைவு உண்டுபண்ணுகிறவர்களாயிருக்கிறார்கள். ஒருவர் "அக்கவுண்ட்கோடில்" அதிகாரமில்லையென்கிறார். அவர் சொல்வது சரியல்ல, தப்பு, என்று தெரிந்திருந்தாலும் அக்கௌன்டெண்டு ஜெனரல்மட்டும் போய்த்தான் அக்காரியம் ஆகவேண்டும். அப்படி அக்கௌன்டெண்டு ஜெனரல் வரையிலும் அதற்குமேல் கவர்ன்மெண்டாருக்கும் சென்று ஒப்புக்கொள்ளப்பட்ட விஷயங்களிலுங்கூடச் சிலர் அதையொப்புக்கொள்ளாமல் இரண்டு வருஷத்துக்கு முன், முன்பணமாகக் கொடுக்கவேண்டிய தொகையை எட்டுத்தரம் மரியாதையாய் எழுதியெழுதி யலுத்துச்சலுத்தவர்கள் கண்டிப்பாய் எழுதிக்கேட்டபின் "அப்படிகணக்குக் கொடு" "இப்படி கணக்குக்கொடு" என்று சொல்லி அழிவழக்குச்சொல்லி "அவலை நினைத்து உரலையிடிக்கிற அம்மையார் கதையாக" மனதில் ஒன்றைவைத்துக்கொண்டு அதை நினைத்து குதர்க்கவாதம் செய்கிறார்கள். இப்பொழுது இப்படிப்பட்ட கேஸ்கள் பல நமது கவனத்துக்குக்கொண்டுவரப்பட்டிருக்கின்றன பத்திராசியர் பணம் தண்டப் புறப்பட்டால் பத்திரிகை காலாகாலத்தில் நடப்பது எப்படி? ஆகையால் எல்லாப் பத்திரிகைகள் ஆபீஸிலும் பணந்தண்டல் அச்சிட்டு வெளிப்படுத்தல் முதலிய வேலைகள் வேறொருவர் வசத்தில் ஒப்புவிக்கப்பட்டிருப்பது சகஜம். இதையுணராமல், கடனைச் செலுத்தக் கேட்டால், பத்திராசிரியரையும் கௌரவ காரியதரிசியையும் வம்புக்கு இழுப்பதனால் பிரயோசனம் ஒன்றுமில்லை. இந்தக் கஷ்டம் எல்லாப்பத்திரிகைகளுக்கும் உண்டு: ஆனாலும் இப்பத்திரிகைக்கு அது அதிகமாக ஏற்பட்டு இருக்கிறது. ஆதலால் மானேஜிங் கமிட்டியார் நடந்த நடபடிக்கைகளை யெல்லாம் பரிசீலனைசெய்து சந்தாதாரர்களும் இப்பத்திரிகையின் வரவுசெலவு காரியங்களை ஏஜண்டாகவிருந்து பார்த்துவர ஒப்புக்கொண்ட கம்பெனியாரும் கட்டுப்பட்டு நடக்கத்தக்கதாக ஏற்கனவேயுள்ள விதிகளையெடுத்து பரிஷ்காரமாக வெளியிட்டிருக்கிறார்கள். காகிதம் அகப்படாமையினால் நாலு ரூபாய்ப் பதிப்பு வெகு காலமாக வெளிவராமல் நின்றுவிட்டது. அதுமுதல் ஸ்கூல் எடிஷன் என்று பள்ளிக்கூடங்களுக்கு உபயோகமானதாக ஒரே பதிப்புத்தான் வெளியாகி வருகிறதென்பதை யெல்லாரும் நன்றாக அறியவேண்டும். வால்யம் கணக்காகவே சந்தா ஏற்பட்டுள்ளது. அதற்கு குறைந்தது முன்பணமாக ரொக்கம்கட்டினால் ரூ. 5; ஒரு மாசக் கடன் வேண்டின் கடன்-சந்தாவிகிதம் ரூ. 6. மூன்றுமாசத்துக்குமேல் கடன் பாக்கி யொன்றுமிருக்கக்கூடாது. அப்படி மீறுவை நின்றால் அது விஷயமாக அனுப்பும் ஒவ்வொரு நோட்டீசு அல்லது ஞாபகக்குறிப்புக்கும் வால்யம் 1-க்கு ஒரு ரூபாய் விகிதம் அதிகச் சார்ஜ் சேர்த்துக் கட்டல்வேண்டும். வால்யம் நடுவில் நிறுத்தக்கூடாது. வருஷப்பிரதி வருஷம் வாங்கிவருகிறவர்களே சந்தாதாரர்கள்பட்டியில் சேர்க்கப்படுவார்கள். அவர்களுக்கே இந்த நிபந்தனைகள். இதரர்களுக்குக் காலவிலைபோல் விலையேற்றம் கையிருப்புக் காபிகள் முதலிய சந்தர்ப்பங்களுக்குத் தக்கபடி விலை யேற்படுத்த நேரிடும். இந்த நிபந்தனைகளை முதலேட்டில் மானேஜிங் கமிட்டியார் உத்தரவுப்படி மானேஜிங் ஏஜண்டார் வெளியிட்டிருக்கிறார்கள். இதுவே எல்லாருக்கும் நோட்டீஸாக எடுத்துக்கொள்ளவேண்டும். இங்கிலீஷ் தெரியாதவர்களும் தெரிந்துகொள்ளவேண்டி தமிழில் இதை வெளியிட்டோம்.

லண்டனில் பிரசுரமாகும் டைம்ஸ் பத்திரிகை முதற்கொண்டு எல்லாரும் விலையை அதிகரித்திருக்கிறார்கள். ஒரு காபியை வாங்கிப் பல பாடசாலைகளுக்கு உபயோகிப்பது சந்தா விதிக்கு விரோதமென்பதையும் அவர்கள் இதர சந்தாதாரர்கள் செலுத்தும் தொகையைக்கொண்டும் கைம்முதல் கொண்டும் அச்சிட்டு வெளியாகும் பத்திரிகையை கிரமம் தப்பி உபயோகிக்கிறவர்களாவார்களென்பதையும் மானேஜிங் கமிட்டியார் ஷராவிட்டுக் குறிப்பிட்டிருக்கிறார்கள். காகிதம் பவுண்டு 2½-அணா விற்றகாலத்தில் ஏற்பட்ட சந்தாவையே இப்பொழுது பவுண்டு 7-அணா விற்கும் காலத்திலும் இரண்டு வருஷம் கடனாக வைத்திருந்து கொடுப்பேன் என்று சொல்கிறவர் யோக்கியதையைப்பற்றி நாமொன்றும் சொல்லவேண்டியதில்லை. ஆனால் அப்பேர்ப்பட்டவர் பொது நலஸ்தாபனங்களின் விசாரணை கர்த்தராயிருக்கிற முறையில் கிடைக்கக்கூடிய நாணயத்தைக்கொண்டு ஆயிரம் ஐந்நூறு என்றும் நூறு, இருநூறு என்றும் கடன்பட்டுவிட்டுக் கடனைத் தீர்க்கமாட்டேன் என்று வம்புசெய்தால் இதற்கு என்ன செய்கிறது! இவர்கள் சொந்தத்தில் இப்படி நடப்பவர்களானால் இவரைநம்பி இவ்வளவு கடன் கொடுப்பார்களா என்பதை நிதானிக்கவேண்டும். "இந்தக் கேஸ்கள் எல்லாம் கோர்ட்டுக்குப்போனால் கோர்ட்டுச்செலவு வம்பு வழக்குகளுக்கெல்லாம் யார் ஆளாகிறது என்பதை இவர்கள்சிந்திக்கிறார்களில்லையே!" இன்றைக்கு வந்த சுதேசமித்திரனிலும் பின்வருகிற விஷயம் வெளியாகியிருக்கிறது. சென்னை டைம்ஸ், ஹிந்து பத்திரிகைகளும் குறைந்த சந்தாவுக்குப் பத்திரிகை விற்றுவர இனி முடியாது என்று விளம்பரப்படுத்தியிருக்கிறார்கள்.

பத்திரிகைகளின் சிரமம்.

பத்திரிகைகளுக்கு ஏற்பட்டிருக்கும் சிரமத்தைப்பற்றி அடிக்கடி ஞாபகப் படுத்தப்படுகிறோம். "ஸிலோன் டைம்ஸ்" என்ற பத்திரிகை ஞாயிற்றுக்கிழமைகளிலும் பிரசுரமாவது வழக்கம். ஞாயிற்றுக்கிழமைப் பிரசுரத்தை நிறுத்திவிடப் போகிறதாக அப்பத்திரிகை அறிவிக்கிறது. "இங்கிலாந்தில் பத்திராதிபர்கள் சந்தாத் தொகையையும் உயர்த்தி பக்கங்களையும் குறைத்துவிட்டார்கள். அவர்களுக்கிருப்பதைவிட இங்குள்ளவர்களுக்கிருக்கிற கஷ்டம் அதிகம். காகிதம் முதலிய சாமான்களின் விலை உயர்ந்துவிட்டதல்லாமல், எந்த சமயத்தில் தட்டேற்பட்டு விடுமோ என்ற அச்சத்தால் ஒரு வருஷத்துக்குவேண்டிய சாமானை வாங்கி வைத்துக்கொள்ள வேண்டியிருக்கிறது; அதனால் ஏராளமான வட்டி நஷ்டமும் ஏற்படுகிறது" என்று சொல்லி அப்பத்திரிகை வருத்தப்படுகிறது.—சுதேசமித்திரன்.

---

Dr. D. Duncan, late Director of Public Instruction, who is one of the supporters of the Children's Educational Movement, still keeping himself in touch with the same, writes with reference to the Memorandum on the Reform of Rural Education published in the "*Vivekachintamani*" as follows, under date 20th November 1916 :—

"I am glad to see by the copy of *Vivekachintamani* received the other day, that you are as active as ever in your efforts for the welfare of your fellow-countrymen old and young. Yourmain purpose is rightly, I have no doubt, to get at the young. The war is the engrossing subject in this country at present ; but educational questions are also being discussed ; it being realized that many changes must come after the war and that it is desirable that men's minds should be prepared beforehand, so that ill considered schemes should not be rushed at the last moment."